2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 13 மதுரை 17 7–75 வியாழன் மலர் 140

## உத்தரப்பிரதேச விவசாயிகள் கோரிக்கை

லக்னோ, ஜூலை. 18—

விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச தினக்கூலி ரூ. 7 அல்லது 5 கிலோ தானியம் தரவேண்டும் என்று உத்தரபிரதேஷ் விவசாய சங்க மாநாடு தீர்மானம் நிறைவேற்றியது. உழுபவனுக்கு நிலம் கிடைக்கச் செய்ய, ஸ்தாபன ரீதியில் ஒன்று திரண்டு. உறுதியான போராட்டம் நடத்த விவசாயத் தொழிலாளர்களும் ஏழை விவசாயிகளும் முன்வந்தால்தான் முடியும் என்றும் தீர்மானம் சுட்டிக்காட்டியது.

## சொந்த முடிவு

'நான் ஏராளமானேரை கலந்து ஆலோசனை நடத்துகிறேன்; ஆனல், எனது சொந்த முடிவுகளையே எடுக்கிறேன்'— இவ்வாறு பிரதமர் இந்திரா காந்தி ஒரு பேட்டியில் கூறினர்.

(ஆதாரம்: டைம்ஸ் ஆப் இந்தியா)

# ஒடுக்கப்பட்ட மக்களின் விடுதலைக்கு- சமுதாய மாறுதலுக்கு- இலக்கியம் படைத்திட வாரீர்!

## தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர்கள் சங்க மாநாட்டில் திருமதி கோதாவரி பருலேகர் துவக்கவுரை

மதுரை, ஜூலை 15

'கலை கலைக்காகவே' என்று கதைத்துக் கொண்டிருந்தோர் இன்று அதிகம் பேரில்லை. கலை மக்களுக்காகவே என்பதை இன்று அனைவரும் உணரத் தொடங்கிவிட்டனர். ஆனல், யார் அந்த மக்கள்? அவர்கள் எங்கே இருக்கிருர்கள்? எப்படி வாழ்கிருர்கள்?- என்பதுதான் முற்போக்கு எழுத்தாளர்களுக்கு ஒரு முக்கிய பிரச்னை - இவ்வாறு தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் முதல் மாநாட்டைத் துவக்கிவைத்துப் பேசுகையில் திருமதி கோதாவரி பருலேகர் கேள்விகளை எழுப்பி அதற்குப் பதிலும் கூறினர்.

இம்மாநாடு ஜூலை 12, 13 தேதிகளில் மதுரை தமுக்கம் கலையரங்கில் வெகு சிறப்பாக நடந்தேறியது.

இந்த மாநாட்டிற்கு முற்போக்கு எழுத்தாளர்களானதிருவாளர்கள் கு. சின்னப்ப பாரதி, தணிகைச்செல்வன், டி. செல்வராஜ ஆகியோர் தலைமை வகித்தனர்.



மகாராஷ்டிரத்திலிருந்து மாநாட்டு நிகழ்ச்சிகளைத் துவக்கிவைப்பதற்கென்றே. மராத்திய மொழியில் "ஜீவக மனுஸ் ஜாகா ஹடோ" (எப்போதுமனிதன் விழிக்கிருனே) எனும் நூல் எழுதி அதற்கு ஜனுதிபதி பரிசுபெற்ற பிரபல மராட்டிய எழுத்தாளர் திருமதி கோதாவரி பருலேகர் வந்திருந்தார்.

### நாரண துரைக்கண்ணன் 'ஆர்வி', என் சங்கரய்யா

மாநாட்டில் கலந்து கொண்டு பிரபல தமிழ் எழுத்தாளரும் "பிரசண்ட விகடன்" ஆசிரியருமான நாராண துரைக்கண்ணன் அவர்களும், பிரபல தமிழ் நாவலாசிரியரும் "கண்ணன்" ஏட்டின் ஆசிரியருமான 'ஆர் வி' அவர்களும் என் சங்கரய்யா அவர்களும் மாநாட்டிற்கு வாழ்த்துரை வழங்கினர்.

### துவக்கவுரை

இந்த இரண்டு நாள் மாநாட்டைத் துவக்கி வைத்த கோதாவரிபருலேகர் சிறந்ததோர் இலக்கிய உரையாற்றினர்.

யாருக்காக இலக்கியம் படைக்கவேண்டும்? அதை எவ்வாறு படைக்கவேண்டும்?என்பதை அவர்விளக்கிய பாணி மிகஅற்புதமாக இருந்தது

அவர், பேசுகையில் மேலும் கூறியதாவது:—

நான்எழுதியஒருநூலுக்கு. (.எப்போது மனிதன் விழிக்கிருனே' எனும் நூல்) ஜனுதிபதி பரிசு கிடைத்தது. பொதுவாகக் கூறப்படும் அர்த்தத்தில் நான் ஒரு எழுத்தாளன் அல்ல.

### இலக்கியத்தின் கருப் பொருள் எது?

எந்த மராட்டிய மாநிலத்தின் ஆதிவாசி மக்களுக்காக (வார்லி என்னும் ஆதிவாசி மக்கள்) நான்பணியாற்றச் சென்றேனே, அந்த ஆதிவாசி மக்களின்வாழ்க்கையைத்தான் நுணுக்கமாகவும் யதார்த்தமாகவும் சித்தரித்தேன். அதுதான் நல்ல இலக்கியமென்று மராட்டிய எழுத்தாளர்கள் ஏற்றனர். ஜனுதிபதி பரிசும் வழங்கப் பட்டது.

இவ்வாறு-மிகக் கொடுமையான நிலப்பிரபுக்களால் மிகமிகக் கேவலமானமுறையில் ஒடுக்கப்பட்டுவந்த ஆதிவாசிகளின் வாழ்க்கையை என் எழுத்தின்கருப் பொருளாகக் கொண்டிருக்கவில்லையென்ருல் அது ஒரு இலக்கியமாக ஆகி இருக்க முடியாது.

### நிலப்பிரப்புக்கள் இழைத்த கொடுமை

என் நூலிலே, ஆதிவாசி கிராமங்களில் நிகழ்ந்தஅன்ருட வாழ்க்கையை விவரித்தேன். அங்குள்ள குடிசைகள் ஒன்றுக்கும் மற்றென்றுக்குமிடையே இடைவெளி மிகதூரம். அந்தக் குடிசைகளில் வாழ்ந்த அழகிய இளம் பெண்கள் நிலப்பிரபுக்களின் கண்ணில்பட்டால் அவர்களது கற்பு சூறையாடப்படும். இது அன்று சாதாரண நிகழ்ச்சி. இதை கேட்பார் யாருமில்லை. இதை எதிர்க்கும் சக்தியும் அந்த மக்களிடம் இல்லை.

### ஒரு கொடிய நிகழ்ச்சி

ஒரு விவசாயியின் மனைவி —அவள் மிக அழகானவள் அவள் கொடிய நிலப்பிரபு ஒருவனின் காம இச்சைக்கு ஆளாக்கப்படுகிருள். இதை தட்டிக் கேட்ட அவளது கணவன் கொலை செய்யப் படுகிருன். குழிதோண்டி புதைக்கப்படுகிருன்.

போலீசாரிடம் புகார் செய்கின்றனர். ஆதிவாசிகள். பல மாதங்களுக்குப் பிறகு எலும்புக் கூடு தோண்டி எடுக்கப்படுகிறது. டாக்டர்களின் முடிவுஎன்ன தெரியுமா? அது மனித எலும்பு அல்ல; மாட்டு எலும்பு என்பது தான்.

### புதிய நிலைமை

இதன் பின்னர், படிப்படியாக அந்தப் பிரதேசத்தில் செங்கொடி இயக்கம் வளர்கிறது.ஆதிவாசிகளிடையே ஓர் எழுச்சி, தன்னம்பிக்கை. தங்களை இனம்கண்டுகொள்ளும் புதிய நிலைமை.

12 ஆண்டுகளுக்கு பின்னர் கணவனை இழந்த அதே பெண், என்முன் வந்து நின்ருள். அவளது கண்களில் நீர் சொட்டியது. "ஏன் அழுகிருய்?" என்று கேட்டேன்

"நான் அழவில்லை;எனக்கு ஒரு இனம்கண்டு கொள்ள முடியாத உற்சாகமும் ஆனந்தமும் ஏற்பட்டிருக்கிறது" என்ருள். எங்கள் கிராமத்தில் இப்போதுதான் மனிதர்களாக வாழ்கிருேம் என்ருள். செங்கொடி எங்களுக்கு விடுதலை தந்துவிட்டது; அந்த ஆனந்தத்தில், உற்சாகத்தில்தான் கண்ணீர் வந்துவிட்டது என்ருள்.

இதுபோன்ற நெஞ்சுருக்கும் கதைகள் பல என் நூலில் உண்டு.

### செங்கொடி தலைமையில் விடுதலை

அந்தக் கிராமத்தில் நிலத்தை உழ ஏரின் ஒரு பக்கத்தில் மாடும், மறுபக்கத்தில் மனிதனும் கட்டப்படுவான். இவ்வாறு மராட்டியத்தில் உள்ள 30 லட்சம் ஆதிவாசிகளின் வாழ்கையைச் சித்தரிக்க முயன்றதுதான் என் நூல். அவர்கள் இன்று கொத்தடிமைத்தனத்திலிருந்து செங்கொடியின் தலைமையில் விடுதலை பெற்று வருகின்றனர்.நிலப்பிரபுவை காக்கவந்த போலீசும் இராணுவமும் தங்களது அடக்குமுறைகளால் ஆதிவாசிகளை இன்று ஒடுக்கிவிட முடியவில்லை.

### மரங்களில் வாழ்ந்தேன்

இப்படிப்பட்டவர்களின் குடிசைகளில் தங்கிஞலே ஆபத்துவரும் என்ற நிலை இருந்ததால், அந்தக்காடுகளின் மரங்களிலும் நிழல்களிலும் தங்கி அதிக நாட்களை கழித்தேன். இன்று அந்த நிலைமை மாறி உள்ளது. ஆதிவாசிகளும் மக்கள்தான் என்று நடுத்தர மக்களும் ஏனையோரும் ஒப்புக் கொண்டனர்.

இந்த அனுபவமே, நான் எழுதிய நூலில் எடுத்துக் கொண்ட விஷயம். இவ்வாறு மக்களின் வாழ்க்கையை இலக்கியமாக எழுத எழுத்தாளர்கள் முன் வந்தால், அது சிறந்ததாக விளங்கும்.

—என்று, கோதாவரிபருலேகர் குறிப்பிட்டபோது, மாநாட்டுப் பிரதிநிதிகள் 'கரவொலி' எழுப்பி வரவேற்றனர்.

தமிழ்நாட்டில்முற்போக்கு எழுத்தாளர் சங்கம் உருவாகி அது இங்குள்ள மக்களின் யதார்த்த வாழ்க்கையைச் சித்தரித்து இங்கு இலக்கியத்தில் ஒரு மாறுதலை உண்டாக்க வேண்டும் என்று கூறி, மாநாட்டு நிகழ்ச்சிகளை துவக்கி வைத்தார்.

### கே. முத்தையா

அடுத்து தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் அமைப்பாளர் கே. முத்தையா சங்கத்தின் 10 அம்ச கொள்கை அறிக்கையினை முன்மொழிந்து, அதை விளக்கி தமிழ் எழுத்துலகில்மேலோங்கியுள்ள பிற்போக்கு இலக்கியப் போக்குகளைப் பற்றி பல விபரங்களுடன் பேசினர்.

அதன் விபரமும் "தேசாபிமானி" ஆசிரியர் கோவிந்தப்பிள்ளை அவர்கள் ஆற்றிய சிறப்புரையும் மாநாட்டின் ஏனைய நிகழ்ச்சிகளும் நாளை வெளிவரும்.

## மாடல் நிலையங்கள் நடத்த மத்திய அரசு யோசனை

பம்பாய், ஜூலை. 14—

அத்தியாவசியப் பொருட்களை நியாய விலைக் கடைகளில் விநியோகிக்கும் திட்டத்தின் முன் மாதிரியாக 4 மாதிரி நிலையங்களை 4 மாநிலங்களில் ஆரம்பிக்குமாறு தொழில் சிவில் சப்ளை ராஜாங்க அமைச்சரால் 4 மாநிலங்கள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளன.

துர்க்காபூர் (மேற்குவங்கம்) நைனிடால் (உத்திரப் பிரதேசம்) கொச்சின் (கேரளம்) கோவை (தமிழ்நாடு) ஆகிய இடங்களே மாதிரி நிலையங்கள் ஆரம்பிக்கவிருக்கும் தொழிலாளர் மிகுந்த நகரங்கள்.

மத்திய அரசின் அனுபவத்தை எதிர்பார்க்காமல் உடனடியாக அந்நான்கு மாநில அரசுகளும் அம்மாதிரி நிலையங்களுக்கான நடவடிக்கையில் இறங்க வேண்டுமென்றுஅமைச்சர் ஜார்ஜ் கேட்டுக் கொண்டுள்ளார்

அந்நான்கு மாநிலங்களின் உணவு சிவில் சப்ளை அமைச்சர்களை டெல்லிக்கு வரவழைத்து மாடல் நிலையம் பற்றி விவாதம் நடத்திய போது மேற்கண்ட முடிவு எடுக்கப்பட்டது.

அப்பேச்சு வார்த்தையில் கலந்துகொண்ட தமிழ நாடு உணவு, சிவில் சப்ளை அமைச்சர் மாதவன் மாடல் நிலையங்கள் நடத்துவதற்கு சம்மந்தப்பட்ட மாநில அரசுகளுக்கு அத்தியாவசியப் பொருட்களை மத்திய அரசு அதிக அளவில் ஒதுக்க வேண்டும் என்றும் மாநில அரசு விநியோகிக்கும் அப்பொருட்களுக்கு மத்திய அரசு மானியமும் வழங்க வேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

கூட்டுறவு சொசைட்டிகள் சிவில் சப்ளை கார்ப்பரேஷன் ஆகியவைகளால் 10 ஆயிரம் நியாய விலைக் கடைகளின் மூலம் தமிழ் நாட்டில் அத்தியாவசியப் பொருட்கள் சப்ளை செய்யப் படுவதாகவும் அவர் தெரிவித்தார்.

## பாசிச எதிர்ப்பு அணியில் கவர்ந்திழுக்க வேண்டும்



"பூர்ஷ்வாக்கள் தொடுத்து விடுகின்ற சமூக வாய் ஜாலங்களின் பின்னுல் இருக்கின்ற உண்மைகளை அம்பலப்படுத்தி, தொழிலாளி வர்க்கத்தினரையும், ஏனைய உழைக்கும் வெகு ஜனங்களையும் தெளிவுபடுத்துவதற்குப் பதிலாக, இந்த வலதுசாரி சோசலிஸ்டுகள் (பாசிஸ்ட் ஜெர்மனியில் இருந்தவர்கள்) ஒருவகையில் அல்லது இன்னெரு வகையில் ஆளும் வர்க்கத்திற்கு துணை நிற்கிருர்கள்...

'இதுதான் பாசிசத்தின் வளர்ச்சியை தடுத்து நிறுத்தத் திறனுள்ள ஏக சமூக சக்தியை (தொழிலாளி வர்க்கத்தை) பலவீனப்படுத்துகிறது

'அகவே, வலதுசாரி சோசலிஸ்டுகள் [அவர்களின் தலைமை] தொடர்ந்து கடைப் பிடிக்கின்ற இந்த கொள்கைகளை உறுதியாக நின்று எதிர்ப்பதோடு அவர்களின் பின்னுல் திரண்டுள்ள வெகுஜனங்களையும் சாதாரண உறுப்பினர்களையும் பாசிச எதிர்ப்பு அணியில் கவர்ந்திழுக்கவும் செய்ய வேண்டும்"

—தோழர் ஜார்ஜி டிமிட்ரோவ்

## மக்கள் வரிப்பணத்திலிருந்து ஏற்றுமதியாளர்களுக்கு அள்ளி இறைப்பது நிறுத்தப்படுமா?

பம்பாய், ஜூலை, 14—

இந்தியாவின் ஏற்றுமதியை பெருக்குவதற்காக ஏற்றுமதியாளர்களுக்கு மானியம்கொடுப்பதற்குஎன பட்ஜெட்டில் ஏராளமான நிதி ஒதுக்கப்படுகிறது. அப்படியொரு ஏற்றுமதி முறையை நிறுத்துவது தேவையானதென்று மத்திய நிதி அமைச்சர் சுப்ரமணியம் கூறினர்.

இந்தியாவின் அன்னிய வியாபாரக் கவுன்சிலின் வருடாந்திர மாநாட்டை ஆரம்பித்து வைத்து பேசுகையில் மேற்கண்டவாறு கூறினர்.

ஏற்றுமதியை ஊக்குவிக்க மானியம் என்ற பெயரில் ஏற்றுமதியாளர்களுக்கு அரசாங்க கஜனுவில் உள்ள மக்கள் வரிப்பணத்திலிருந்து அள்ளிக் கொடுக்கபபடுகிறது, அது நிறுத்தப்படும் என அமைச்சர் பிரகடனம் செய்யவில்லை. நிறுத்தவேண்டியதன் அவசியத்தைத்தான் பேசுகிருர்.

மேலும் அவர் பேசுகையில் இந்தியாவின்பாரம்பரிய ஏற்றுமதியில்கூட சர்வதேச வியாபாரத்தில் இந்தியாவின் பங்கு குறைந்து கொண்டு இருக்கிறது என்று கூறிய அமைச்சர் சுப்ரமண்யம் பாரம்பரிய தொழில்களை நாம் காப்பாற்ற வேண்டும். இல்லையெனில் தற்போதுள்ள இந்தியாவின் ஏற்றுமதிக்கான சந்தையைக்கூட நாம் இழக்கநேரிடும்என்ருர்.

மேலும் இந்தியாவின் எதிர்கால ஏற்றுமதி உயர்வானது இஞ்சினீயரிங்.கெமிகல்போன்ற நவீன தொழில் உற்பத்தியை அதிகரிப்பதில் இந்தியாவின் சக்தியோடு இணைந்துள்ளது என்றும் அவர் குறிப்பிட்டார்.

### டெல்லியில் ஒரு கூட்டம்

இந்தியாவிலிருந்து அ...

(2-ம் பக்கம் பார்க்க)

## எத்தியோப்பிய சோஷலிசம் இராணுவத்தலைவர் விளக்குகிருர்

அடிஸ் அபாபா, ஜூலை. 16—

ஆப்பிரிக்க கண்டத்தில், முன்பு அபிசீனியா என்று அழைக்கப்பட்டு வந்ததும், இப்போது எத்தியோப்பியா என்று அழைக்கப்படுவது மான நாட்டிலே- இராணுவத்தலைவர்களின் ஆட்சி நடக்கிறது.

அந்த இராணுவ ஆட்சியாளர்கள் எத்தியோபியாவின் கொள்கையை அறிவித்துள்ளார்கள். அதாவது, 'எத்தியோப்பியாவுக்கேற்ற சோஷலிசப் பாதையில்'' செல்வதாக அறிவித்துள்ளனர்.

எத்தியோபியா நாடு ஹெயிலி செலாஸி என்ற மன்னரின் கீழ் 44 ஆண்டு இருந்தது. சென்ற ஆண்டு செப்டம்பர் 14ம் தேதி ஹெயிலி செலாசியை தூக்கி எறிந்து விட்டு இராணுவ ஆட்சி ஏற்பட்டதும் அரசியல் கட்சிகளுக்கு தடை விதிக்கப்பட்டது.

சீக்கிரமே சோஷலிஸப் பாதையில் செல்லக் கூடிய ஒரு புதிய அரசியல் கட்சியை ஏற்படுத்தப்போவதாக இராணுவ ஆட்சியாளர்கள் தெரிவிக்கிருர்கள்.

சென்ற ஆண்டு டிசம்பரிலேயே இராணுவ ஆட்சியாளர்கள், சோசலிசத்துக்கான 10 அம்சத்திட்டத்தை வெளியிட்டிருந்தார்கள்.

அத்திட்டத்தில்ஒரேயொரு தேசிய சோசலிஸ்ட் அரசியல் கட்சி ஏற்படுமென்பதுவும் ஒரு அம்சம்

அரை நிலப்பிரபுத்துவ மன்னராட்சியை, சோஷலிஸ்ட் ஆட்சியாக மாற்ற வேண்டுமென்று இராணுவ ஆட்சியாளர்கள் திட்டமிட்டிருக்கிருர்களாம்.

### தேசவுடைமை

6 பேங்குகளையும், அடமான கார்ப்பரேஷன்களை அனைத்தையும்,14 இன்சூரன்ஸ் கம்பெனிகளையும் இராணுவ ஆட்சியினர் தேசவுடைமை ஆக்கிவிட்டனர். இவற்றில் பல அன்னிய நாடுகளுக்குச் சொந்தமானவை.

### புதிய அரசியல் கட்சி

இப்பொழுது ஆட்சிப் பொறுப்பிலுள்ள தற்காலிக இராணுவக கவுன்சிலின் தலைவரான பிரிகேடியர் ஜெனரல்தேபேரி பாண்டே, பட்டாளத்துக்காரர்கள் மத்தியிலும், போலீஸ் படையினர் மத்தியிலும் பேசுகையில், "அமைக்கப்படவிருக்கும் புதிய அரசியல் கட்சியில் விவசாயிகளும் தொழிலாளர்களும் மற்றுமுள்ள முற்போகக சக்திகளும் இருப்பார்கள்"—என்ருர்.

ஆனல் அந்த முற்போக்கு சக்திகளில் யார் யார் இருப்பார்கள் என்று சுட்டிக்காட்டவில்லை.

# தீக்கதிர்

## அங்கோலாவுக்கு சோதனைக் காலம்

போர்த்துகீசிய ஏகாதிபத்தியம் தனது ஆப்பிரிக்க காலனிகளிலிருந்து வெளியேறி அவற்றிற்கு சுதந்திர அந்தஸ்து அளிப்பதாக சென்ற வருடம் வாக்குறுதி அளிக்க வேண்டிய நிலைமைக்கு நிர்ப்பந்திக்கப்பட்டது. அந்தக் காலனிநாடுகளில் கிளர்ந்தெழுந்த விடுதலைஇயக்கமும், அவர்கள் நடத்திய ஆயுதந்தாங்கிய போராட்டமும், மக்களின் எதிர்ப்பையும் சமாளிக்க முடியாமல் போர்த்துக்கல் ராணுவத்திலேயேகலகம்ஏற்பட்டு போர்த்துக்கல் நாட்டிலேயே அரசியல் நெருக்கடி மிகுந்து அங்கிருந்த பழைய பாசிச ஆட்சி தூக்கி எறியப்பட்டது, சமீபகால சரித்திரம். இப்போதுள்ள போர்த்துக்கல் (ராணுவக் கவுன்சில்) அரசாங்கம் காலனி விடுதலை பற்றியவாக்குறுதியைஉறுதியாக நிறைவேற்ற விரும்புகிறது.

இவ்வாறு பூரணவிடுதலை அடைந்த நாடுதான் சென்றவாரம் விடுதலை விழாவை கொண்டாடிய மொசாம்பிக் தேசம். இது ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரையிலிருக்கிறது. இதற்கு முன்பே கினி-பி-சோ நாடு விடுதலை அடைந்துவிட்டது. அதையொட்டியிருந்த "வெர்டி முனை"த் தீவுகளும் சென்ற வாரம் சுதந்திர நாடுகளாகி விட்டன. ஆப்பிரிக்காவில்சுதந்திர அந்தஸ்திற்கான வாய்ப்புஏற்பட்டிருப்பினும் இன்னும் காலனி ஆதிக்கத்தை உதறித்தள்ளி பூரண விடுதலை பெற்றுள்ள நாடாக உருப்பெருமல் எஞ்சியிருப்பது அங்கோலா ஒன்றுதான்.

அங்கோலாவின் விடுதலைக்கு தற்போது போர்த்துகல் அரசாங்கம் முட்டுக்கட்டை போடவில்லை. இவ்வருடம் அங்கோலா சுதந்திரமடையலாமென்று சென்ற வருடமே அறிவித்துவிட்டது. ஆப்பிரிக்காவின மேற்குக் கரையிலுள்ள அங்கோலா இயற்கை வளம்மிக்க பெரிய நாடாகும்.

துரதிஷ்ட வசமாக அங்கோலாவின் விடுதலைக்காகப் போராடி வந்துள்ள சக்திகளுக்கிடையே கடும் வேற்றுமைகள் நிலவுவதால் தான் அங்கோலா சுதந்திரநாடாவது தடைப்பட்டிருக்கிறது.

இந்த விடுதலை இயக்கங்கள் மூன்று கூறுகளாகப் பிரிந்து நிற்கின்றன: (1) அக்ஸ்டியனு நெட்டோவை தலைவராகக் கொண்ட அங்கோலா விடுதலை மக்கள் முன்னணி (2) ஹோல்டன் ராபெர்ட்டோவைத் தலைவராகக் கொண்டுள்ள அங்கோலா விடுதலை முன்னணி, (3) ஜோனஸ் சாவிம்பி தலைமையிலுள்ள அங்கோலா சுதந்திர தேசீய யூனியன்.

இந்த மூன்று இயக்கங்களும் சிறிதுகாலம் தங்கள் வேற்றுமைகளை மறந்து ஒன்றுபட்டு நிற்க இசைந்தன. ஆப்பிரிக்கர்கள் கைகளுக்கு அங்கோலா நிர்வாகம் படிப்படியாக மாற்றப்படலு மாயிற்று. சுமார் இரண்டரை லட்சம் போர்ச்சுகீசியர்கள் இருக்கிருர்கள், அவர்கள் ஆப்பிரிக்க ஆட்சிக்கு இசைவு தெரிவித்து விட்டார்கள் அவர்களில் போர்த்துகீசிய சிபபாய்களும் இருக்கிருர்கள். ஆனல் அவர்கள் போராடுவதற்குத் தயாராயில்லை, போர்ச்சுகல் நாடடுக்குத் திரும்புவதில் அக்கரையாயிருக்கிருர்கள்.

ஆப்பிரிக்கர்களின் மூன்று விடுதலை இயக்கங்களும் மீண்டும் அவர்களுக்குள் சண்டையிட்டுக்கொள்ள ஆரம்பித்தன; ஆயுதங்களை ஒப்படைத்துவிடவேண்டுமென்ற கட்டளை அமுலாகவில்லை. உள்நாட்டுப் போர் மூண்டது. லுவாண்டா என்ற தலைநகரில் நூற்றுக்கணக்கானவர்கள் இப்போரில் மடிந்தனர். மீண்டும் ஒற்றுமையையும் சமாதானத்தையும் நிலைநாட்டி அங்கோலாவின்சுதந்திர அந்தஸ்தை சீக்கிரம் உறுதிப்படுத்த, இந்த மூன்று விடுதலை இயக்கங்களின் தலைவர்களும் கெனியா நாட்டுக்கு அழைக்கப்பட்டு, இதர ஆப்பிரிக்க நாடுகளின் தலைவர்கள் அவர்களோடு பேசி, ஒற்றுமைக்கான உடன்பாடு சமீபத்தில் மீண்டும் ஏற்பட்டது.

ஆயினும் அங்கோலா நாட்டுக்குத் திரும்பியவுடன் கோஷ்டிச்சண்டைகள் மீண்டும் இவர்களுக்குள் தலைதூக்குவதாகச செய்திகள் வருகின்றன. ஆயினும் இவற்றை சமாளித்து ஒற்றுமையை உறுப்படுத்திக்கொண்டு அங்கோலா நாட்டின் சுதந்திர அந்தஸ்தை உலகறியப்பிரகடனப்படுத்த வேண்டிய பெரும் பொறுப்பு இந்த விடுதலை இயக்கத் தலைவர்களுக்கு உள்ளது.

அதைத் தொடர்ந்து ஏற்கெனவே போர்ச்சுகல் நாடு சென்ற வருடமெ அறிவித்தது அங்கோலாவிடுதலை இயக்கத்தினரும் ஏற்றுக்கொண்டுள்ளபடி ஒரு அரசியல் நிர்ணயச்சபையைதேர்ந்தெடுக்கும் வேலை அங்கோலா மக்களால் மேற்கொள்ளப்பட வேண்டியுள்ளது.

---

## ஜனநாயக உரிமைகள் பாதுகாப்பு இயக்கம்

திண்டுக்கல், ஜூலை. 4— தமிழகம் முழுதும் பல இடங்களில் மார்க்சிஸ்ட் கட்சி சார்பிலும் மற்றும் பல் வேறு வெகுஜன ஸ்தாபனங்கள் சார்பிலும் ஜனநாயகபாதுகாப்பு பொதுக்கூட்டங்கள் நடந்தன.

இவற்றில், நாட்டின் ஜனநாயகத்தையும் ஜனநாயக உரிமைகளையும் பாதுகாக்க உழைக்கும் மக்கள் அனைவரும் முன்வரவேண்டும் என்று அறைகூவல் விடுக்கப்பட்டது.

### திண்டுக்கல், வேடசந்தூர் தாலுகாக்களில்

பாளையம் பகுதி புளியம்பட்டியில் கடந்த ஜுன் 26— ந்தேதி யன்று தோழர் டாக்டர் சுப்ரமண்யம் தலைமையில் நடந்த கூட்டத்தில் தோழர்கள் எம், மாரிமுத்து, மதுரை வி. வாழவந்தான்ஆகியோர் பேசினர்.

### வட மதுரை

இங்கு தோழர் ஆழ்வார்தலைமையில் 27 ந் தேதி நடந்த கூட்டத்தில் தோழர்கள் பி. கே. பழனியாண்டி, மருதமுத்து, ஆர். ராமசாமி, எம். பி. மணிவேல் பேசினர்.

### திண்டுக்கல்

திண்டுக்கல் நகர் மேட்டுப்பட்டியில் தோழர் சின்னப்பன் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் வி.' எஸ். எம். மரைக்காயர் பேசினர்;

மேற்கு ரத வீதியில் தோழர் ராமசாமி தலைமையில் நடந்த கூட்டத்தில் தோழர் என், வரதராஜன் பேசினர்.

இந்நான்கு கூட்டங்களிலும் மதுரை மணவாளன் குழுவினரின் அரசியல்கலை நிகழ்ச்சிகள் நடந்தன.

### பேகம் பூர்

கடந்த 5 ந் தேதி யன்று பேகம் பூரில் தோழர் அக்கீம் தலைமையில் நடந்த கூட்டத்தில் தோழர்கள் வி. எஸ். எம். மரைக்காயர். எஸ். ஏ. தங்கராஜ் பேசினர்.

பெரியகடை வீதியில் 6 ந்தேதிதோழர் நடராஜன் தலைமையில் நடத்த கூட்டத்தில் தோழர் வி. எஸ். எம். மரைக்காயர் பேசினர்.

இவ்விரு கூட்டங்களிலும் மதுரை தியாகி ராமசாமி குழுவினரின் அரசியல் கலை நிகழ்ச்சிகள் நடந்தன.

### தீர்மானங்கள்

தற்போது நாட்டில் பிரகடனம் செய்யப்பட்டுள்ள 'அவசர நிலை'யை வாபஸ் பெறவேண்டும் என்றும்,

'மிசா', 'பாதுகாப்புச் சட்டம் ஆகியவற்றை வாபஸ்பெற வேண்டும் என்றும்,

இச்சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் உள்ள அரசியல் தலைவர்களையும் ஊழியர்களையும் உடனே விடுதலை செய்யவேண்டும் என்றும் தீர்மானங்கள் இக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டன.

### கூடலூர்

உத்தமபாளையம் தாலுகா கூடலூரில் கடந்த 6-ந் தேதியன்று எம் ஏ கனி தலைமையில் பழைய பேரூந்து நிலையத்தில் பொதுக் கூட்டம் நடந்தது. தாலுகா விவசாயிகள் சங்கச் செயலாளர் ஏ. லாசர், கூடலூர் விவசாயத் தொழிலாளர் சங்கச் செயலாளர் ஆர். வி மூக்கன், மாணவர் சங்கச் செயலாளர் அசரப், வாலிபர் முன்னணிச் செயலாளர்கள் பி சின்னசாமி,மனோகரன் ஆகியோர்—இன்றுள்ள அவசரநிலை — அரசியல் நிலை குறித்து விரிவாகப் பேசினர். ஜனநாயகத்தைக் காக்க அனைத்து மக்களும் முன்வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

### முகவை மாவட்டம்

முகவை மாவட்டம் இராஜபாளையத்தில் ஜுன் 27ந் தேதியன்று ஜனநாயக உரிமைகள் பாதுகாப்பு கோரிக்கை முழக்கங்களை எழுப்பிக் கொண்டு மக்கள் சென்றனர்

### சத்திரப்பட்டியில் சர்வகட்சி ஊர்வலம்

கடந்த 7ந்தேதியன்று சத்திரப்பட்டியில் அனைத்து கட்சிகளின் சார்பில் நடந்தது.

சத்திரப்பட்டி பஸ் நிலையத்திலிருந்து புறப்பட்டு சமுசிகாபுரம், சங்கரபாண்டியபுரம், அய்யனுபுரம், சத்திரப்பட்டி ஆகிய ஊர்களைச் சுற்றி வந்து சத்திரப்பட்டி பஜாரில் கூட்டம் நடந்தது.

அதில்—ஞானியார், தனுஷ்கோடி டி. கே. டி. சாமி, திருஞானம் ஆகியோர் ஜனநாயகஉரிமைகளைப்பாதுகாக்க வேண்டிய அவசியம் குறித்துப் பேசினர்.

### தளவாய்புரம்

கொமந்தாபுரம் பாரதி திடலிலிருந்து 29ந் தேதி புறப்பட்டு—தளவாய்புரம், முகவூர்,சேத்தூர் வழியாக சந்தைக்கடையை அடைந்தனர். அங்கு நடந்த கூட்டத்தில் தோழர்கள் கே ஏ உலகநாதன், தி நீர் காத்தலிங்கம் ஆகியோர் பேசினர்.

### நெல்லை மாவட்டம்

நெல்லை மாவட்டம் கழுகுமலையில் துரைச்சாமிபுரத்தில் வாலிபர் முன்னணி சார்பில் பொதுக்கூட்டம் நடந்தது.தோழர் சி. ராமசுப்பு தலைமை வகித்தார்.

மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் துணைச் செயலாளர் எம். பாண்டியன்,கோவில்பட்டி நகரச் செயலாளர் எஸ். வெங்கிடு, மாவட்ட வாலிபர் முன்னணி உதவித் தலைவர் எஸ். சக்தி, அய்யாச்சாமி, செல்லையா, கே. பி. பாண்டியன் ஆகியோர் பேசினர்.

இறுதியில், மதுரை குமார் குழுவினரின் அரசியல் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது.

### திருச்சி மாவட்டம்

திருச்சி மாவட்டம் கரூரில், கடந்த 7-ந் தேதி தோழர் ஆர். ரெங்கசாமி தலைமையில் ஜனநாயகப் பாதுகாப்பு பொதுக் கூட்டம் நடைபெற்றது.

பொன்மலை வி. பரமேஸ்வரன். சி. சோளியப்பன். ரத்தினவேல், கே. பி, இராமசாமி, எஸ். நடராஜன், பி. எல். மருதமுத்து, சான்சுந்தரம், புன்னம் இராமசாமி, டி. ஆறுமுகம் ஆகியோர் இன்றைய நெருக்கடி நிலை குறித்துப் பேசினர்.

### தென்னாற்காடு மாவட்டம்

தென்னாற்காடு மாவட்டம் நெய்வேலியில் கடந்த 8-ந் தேதியன்று, கே. திருவேங்கிடம் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம், ஏரியாக் கமிட்டிச் செயலாளர் எம். ரத்தினசபாபதி ஆகியோர் பேசினர்,

---

### வாலிபர் முன்னணி சார்பில்
### எழுச்சிமிகு கலை அம்சங்கள் கொண்ட
## கலையரங்கு — கருத்தரங்கு
## பல தலைவர்கள் பங்கேற்பு

திருப்பூர். ஜூலை, 14— சோசலிஸ்ட் வாலிபர் முன்னணியின் சார்பில் கடந்த 5. 6 தேதிகளில் இலக்கியக் கலையரங்கும் அரசியல் - பொருளாதாரக் கருத்தரங்கும் இங்குள்ள கே. எஸ். ஆர். கல்யாண மண்டபத்தில் சிறப்பாக நடந்தது.இவ்விருதினங்களிலும் மரபப்பேட்டை மைதானத்தில் 'இரு உலகங்கள்' படக்காட்சியும் நடந்தது. கருத்தரங்கில் ஆயிரம் பேர் கலந்து கொண்டனர்.

படக்காட்சியை சுமார் 5000 பேர் கண்டு உணர்ந்தனர். இதையொட்டி திருப்பூர் நகரமே விழாக்கோலம் பூண்டிருந்தது. 5-ந் தேதி நடந்த கலையரங்குக்கு செம்மலர் ஆசிரியர் கே. முத்தையாவும்,கருத்தரங்கு ஜி.காக்குளியபபனும் தலைமை வகித்தனர்.

வாலிபர் முன்னணியின் கொடியை பொதுச் செயலாளர் தோழர் கே. சி. கருணாகரன் ஏற்றி வைத்தார். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் திருப்பூர் நகரச் செயலாளர் தோழர் கே. எஸ். கருப்பசாமி துவக்க உரை நிகழ்த்தினர்.

### நாதஸ்வரம்

மணியக்காரம் பாளையம், வாலிபர் முன்னணி கிளையைச் சார்ந்த தோழர்கள் பழனிச்சாமி, சின்னச்சாமி, கருப்புசாமி. முருகேசன் ஆகியோர்முறையே நாதஸ்வரம், கிளாரினெட், தவுல்கள் ஆகியவற்ருல் இசை மழை பொழிந்து கலையரங்கை கலகலப்பாக்கினர்.

### சிறுவர் கும்மிப் பாடல்

திருப்பூர் கொங்கு நகர் வாலிபர் முன்னணி கிளையினரால் நடத்தப்படும் பாலர் அரங்கத்தை சார்ந்தவர்களும், ஹோ-மாமா பாலர் அரங்கத்தைச் சார்ந்தவர்களுமான 15 சிறுவர்—சிறுமியர் விலைவாசி உயர்வை சுட்டிக் காட்டியும், அதன் கொடுமைகளை அழகாக, நயம்பட கருத்துச் செறிவுடன் பாடல்களாகப் பாடினர். கும்மி அடித்து ஆட்டம் ஆடினுர்கள்.

### வாலிபர் கும்மி

லட்சுமிநகர் மற்றும்கடை வீதி வாலிபர் முன்னணி கிளையைச் சார்ந்த தோழர்கள் 10 பேர், தோழர் எஸ். ஏ. காதர்தலைமையில் பாடல்களுடன் கூடிய அழகான கும்மியாட்டத்தை நடத்தினர்.

### புதுமைக் கச்சேரி

கோவை, பட்டக்காரன் புதூர் வாலிபர் முன்னணி கிளையைச் சார்ந்த சிங்காரம் குழுவினர் புதுமைக்கச்சேரி நடத்தினுர்கள். ஆர்மோனியம் தபேலா போன்ற இசை கருவிகள் இல்லாமல் தகரக் குடம், சலங்கை முதலியவைகளுடன் பாடல்களின் பின்னணி இசையை வாயினலேயே இசைத்துப் பாடியதுடன் ஆடவும் செய்தனர்.

### கிராமியப் பாடலுடன் ஆடல்

வாலிபர் முன்னணியின் மாவட்ட துணைச்செயலாளர்தோழர் பெ தாமோதரன் தலைமையில் 15 தோழர்கள் கருத்துமிக்க இயக்கப் பாடல்களைப் பாடிக் கொண்டே, கிராமியக் கலைகளில் எத்தனைவித ஆட்டங்கள் உண்டோ அத்தனை ஆட்டங்களையும் சுமார் ஒன்னரை மணி நேரம்ஆடிக் காட்டி,எல்லோரையும் மெய் சிலிர்க்கச செய்தனர்.பம்பைசப்ளா கட்டைகள், ஜால்ரா. டிரம்கள் சலங்கைகள் கருவிகளாக பயன்படுத்தப்பட்டன.

### இசை நிகழ்ச்சி

திருப்பூர் முருங்கப்பாளையம், வாலிபர் முன்னணி கிளைதோழர்கள் இன்குலாப் இசைக்குழுவினர் உரையாடலுடன் கூடிய இசை நிகழ்ச்சியை சிறப்பாக நடத்திக் காட்டினுர்கள்.

### கவிதைகள்

தோழர்கள் சி மணி, ரங்கசாமி, திருமலைசாமி, விஜயகுமார், எஸ் ஏ காதர், எம் ரங்கசாமி, என் பழனிச்சாமி ஆகியோர் எழுச்சி மிக்க புதிய முற்போக்குக் கவிதைகளை அரங்கேற்றினுர்கள்.

### மணவாளன் குழு இன்னிசை

இறுதியாக மதுரைமணவாளன் குழுவினரின்பாடல்களுடன், கலையரங்கு. நிகழ்ச்சிகள் முடிவடைந்தன நிகழ்ச்சிகளை முடித்து தோழர் கே முத்தையா பேசினுர்.

### இரண்டாம் நாள் கருத்தரங்கு

இரண்டாம் நாள். கருத்தரங்கு நிகழ்ச்சி 6.ந்தேதிகாலை மதுரைமனவாளன்குழுவின் இன்னிசையுடன் துவங்கியது. துவக்க உரையை தோழர் கே. சி. கருணாகரன் நிகழ்த்த, கருத்தரங்கிற்கு, தோழர் ஜி. காளியப்பன் தலைமை வகித்தார்.

"இன்றைய நிலையில் இளைஞர்கள் பங்கு"- என்னும் தலைப்பில். தோழர் பி. ஆர். நடராஜன், "வியட்னும் மக்கள் வெற்றியும் எதிர்கால விளைவுகளும்" என்னும்தலைப்பில் தோழர் மைதிலி சிவராமன் "இலக்கியத்தில்-நமது கடமை" என்னும் தலைப்பில் தோழர் கே. முத்தையா. "சமுதாய மாற்றங்களில் மார்க்சீயப்பார்வை"- என்னும் தலைப்பில் தோழர் வி. பி. சிந்தன், "திராவிட இயக்கத்திலிருந்து.அண்ணயிசம் வரை"என்னும் தலைப்பில் தோழர் கே. ரமணிஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

இரவு 7 மணிக்கு. திருப்பூர் சிக்கண்ணசெட்டியார் வீதியில் நடைபெற்ற பொதுக் கூட்டத்திற்கு வாலிபர் முன்னணியின் பொதுச்செயலாளர் தோழர் கே. சி. கருணாகரன் தலைமைவகித்தார். தோழர்கள் கே எஸ். கருப்புசாமி, மைதிலி, வி. பி. சிந்தன், கே. ரமணி ஆகியோர் இன்றைய அவசர அரசியல் நிலைகளை விளக்கிப் பேசினர். இறுதியில் மதுரைமணவாளன் குழுவினரின் பாட்டுக்கச்சேரி நடைபெற்றது-

---

## கே. எம். ஜார்ஜ் மற்றும் ஒருவர் மட்டும்விடுதலை

திருவனந்தபுரம், ஜூலை. 14— கடந்த 9-ந் தேதியன்று கேரள மாநிலம் முழுவதும் 'மிசா', பாதுகாப்புச் சட்டம் ஆகியவற்றின் கீழ் கைது செய்யப்பட்ட எதிர்க்கட்சித் தலைவர்களில்—கேரள காங் காங்கிரஸ் கட்சியின் தலைவர் கே எம் ஜார்ஜ், கே பாலகிருஷ்ணபிள்ளை எம் பி, இருவர் மட்டும் விடுதலை செய்யப்பட்டனர்.

---

### சிலி நாட்டுக்குள்
## ஐ. நா. கமிஷன் நுழைய முடியவில்லை

ஐக்கியநாடுகள். ஜூலை. 12— சிலிநாட்டு நிலைமைகள் பற்றி விசாரணை நடத்தி வரும் ஐ. நா. வின் மனித உரிமை கமிஷன் தனது வேலையை நிறுத்தக் கொள்ள வேண்டும் என சிலி நாட்டு பாசிஸ்ட் அரசாங்கம் ஐ. நா. பொதுச் செயலாளருக்கு கடிதம் எழுதியுள்ளது.

ஏற்கனவே ஜூலை 4-ல் அக்கமிஷன் சிலி நாட்டுக்குள் நுழையக் கூடாது என பாசிஸ்ட் அரசாங்கம் தடுத்துவிட்டது.

மேலும் ஐ. நா. பொதுச் செயலாளருக்கு எழுதிய கடிதத்தில் மனித உரிமைக் கமிஷன் சிலி நாட்டிற்குள் நுழைய முடியாத நிலையில் உள்ளது என்பதால் அது தனது நடவடிக்கையை தொடரமுடியாது என்று சிலி பாசிஸ்ட் அரசாங்கம் குறிபபிட்டுள்ளது,

மேலும், சிலி நாட்டிலிருந்து விரட்டப்பட்டவர்கள், சிலி நாட்டுக்கு எதிரானவர்கள் ஆகியோரிடமிருந்து பெறும் விசாரணை முடிவுகள் சிலி நாட்டின் தற்போதைய நிலையை பிரதிபலிக்காதாம். தவருனதாக இருக்குமாம்,

மேலும் ஐ.நா. சபையில் பெரும்பான்மையானஉள்ள சோசலிஸ்ட் நாடுகள் அவர்களைச்சார்ந்து உள்ளவர்கள் செய்த சதியே மனித உரிமை கமிஷன் என்கிறது சிலிநாட்டு பாசிஸ்ட் அரசாங்கம்.

சிலிநாட்டு ராணுவ ஆட்சியை அவமானப் படுத்தவும் அதற்கு எதிராக செயல்படவுமே இச் "சதி" செய்யப்பட்டதாம்.

---

## அமெரிக்காவில் தெ. வியட்னுமியர் போராட்டம்

அகனு, ஜூலை. 13— தென்வியட்னுமில் தியூ என்னும்கொடுங்கோலனின் அமெரிக்க அடிவருடியின் பொம்மை ஆட்சி மண்ணில் புதைக்கப்பட்ட காலத்தில் அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளால் தென் வியட்னும் மக்கள் அகதிகள் என்ற பெயரில் கடத்திச் செல்லப்பட்டனர் அல்லவா?

அவர்களனைவரும் தங்களை தாயகத்திற்கு அனுப்பி வைக்க வேண்டுமென்று உண்ணுவிரதப் போராட்டம் நடத்துகிருர்கள்.

இங்குள்ள 1477 தென் வியட்னுமியரில் தாயகம் செல்ல வேண்டும் என வற்புறுத்துபவர்கள் பெரும்பாலும் முன்னுல் கைக்கூலி அரசினர் கூலிப்பட்டாளத்தில் இருந்தவர்கள். அவர்களதுமனைவிகள் அனைவரும் தென்வியட்னுமில் வாழ்கின்றனர்,

இரண்டு வாரங்களுக்கு முன்பு அமெரிக்காவிலிருந்து இங்கு கொண்டு வரப்பட்ட தென் வியட்னுமில் பாதிப்பேர் இன்று 24 மணி நேர உண்ணுவிரத மிருந்தனர். மீதிப்பேர் மதியம் சாபபிடுவதில்லை. தங்களது கூடாரங்களில் இருந்து கொண்டு "நாங்கள் எங்கள் நாட்டை நேசிக்கிறோம்" "தாயகம் செல்ல விரும்புகிறோம்" "இங்கே அடிமைகளாக உள்ளோம்" என்று பாட்டுப் பாடுகின்றனர்.

---

## தேர்தல் வழக்கு தேதி நிர்ணயிப்பு

புதுடெல்லி, ஜூலை,14— பிரதமர் இந்திரா காந்தி தேர்தல் பற்றி அலாகாபாத் உயர் நீதிமன்ற தீர்ப்பை எதிர்த்து சுப்ரீம் கோர்ட்டில் வழக்கு தொடுக்கப்பட்டுள்ளது அல்லவா?

அதன் மீதான விசாரணையைஆகஸ்ட் 11ல்விசாரிக்கப்படும்எனசுப்ரீம்கோர்ட்டால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

பிரதமர் இந்திரா காந்தியின் வக்கீல் கௌசலும், ராஜ்நாராயணன் வக்கீல் சாந்திபூஷனும் வாதங்களை கேட்ட பிறகே இம்முடிவு எடுக்கப்பட்டது.

---

## ஒவ்வொரு பாக்டரிகளிலும் நடுவர் தீர்ப்பு குழு அமைக்கப்பட வேண்டுமாம்

புதுடெல்லி, ஜூலை. 14— இந்தியாவின் 6 முக்கிய தொழில்களின் ஒவ்வொரு தொழிற்சாலைகளிலும் சுய நடுவர் தீர்ப்புக்குழு அமைக்கப்பட வேண்டுமாம். இம் முடிவு முதலாளிகளின் பிரதிநிதிகளும், சில தொழிற் சங்கங்களின் பிரதிநிதி கலந்து கொண்ட நடுவர் தீர்ப்பு ப்ரோமோஷன் போர்டு கூட்டத்தில் எடுக்கப்பட்டுள்ளது.

சிமெண்ட் தொழிற்சாலைகள். பஞ்சாலைகள், சர்க்கரை ஆலைகள், உரம், ரசாயணத் தொழிற்சாலைகள், நிலக்கரி சுரங்கங்கள், துறைமுகங்கள் ஆகிய ஆறிலும் நடுவர் தீர்ப்புக் கமிட்டி அமைக்கப்பட வேண்டுமாம்.

இம்முடிவை எடுத்த ப்ரோமோஷன் போர்டு கூட்டத்தில் மத்திய அரசின் தொழிலாளர் இலாகாஉதவி அமைச்சர் பால்வர்மாவும் கலந்து கொண்டார்.

அவர் பேசுகையில் நடுவர் தீர்ப்பு கமிட்டியை பழக்கத்துக்கு கொண்டுவருமாறு மாநில அளவில் நடுவர் தீர்ப்பு ப்ரோமேஷன் போர்டு அமைக்குமாறு மாநில அரசுகளின் தொழிலாளர்களுக்கு கடிதம் எழுதப்பட்டன. தொழிற்தகராறுகளை தீர்க்கும் பொருட் அப்போர்டை அமைக்குமாறு எழுதப்பட்டன.ஆனல் அம்முயற்சிகள் பயனற்றவைகளாகி விட்டன என்று குறிப்பிட்டார்.

---

## நிறுத்தப்படுமா?...

(1-ம் பக்க தொடர்ச்சி)

னிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் 20 இஞ்சினீயரிங் பொருட்களின் ஏற்றுமதியாளர்களுக்கு கொடுக்கப்பட்டுவரும்மானியம் நிறுத்தப்படலாம் என்கிருர், மத்திய வர்த்தக அமைச்சகத்தின் பொதுச்செயலாளர் ராமானுஜம். அதுவும் அப் பொருட்களின் உற்பத்தி விலை பற்றி விபரங்களை ஜூலை 31 க்குள் அரசாங்கத்திடம் கொடுக்காவிட்டால் தானும்

இவ்விபரத்தை டெல்லியில் நடைபெற்ற ஏற்றுமதி அதிகரிப்புகவுன்சில் சார்பாக நடத்தப்பட்ட கூட்டத்தில் கலந்துகொண்ட 150 ஏற்றுமதியாளர்களிடையே பேசுகையில் அவர் மேற்கண்டவாறு கூறினுர்.

---



இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16பைபாஸ்ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா